# ஸ்ரீ வேதாந்த தேஶிக ஸ்தோத்ரங்கள்

(ஓர் எளிய அறிமுகம்)



ஸ்ரீ உ.வே. வித்வான்

**T.E. ரங்கநாதசார்யர்** ஸ்வாமியின்

உபந்யாஸத் தொகுப்பு



செம்பூர் சேட்லூர் அத்திப்பட்டு

ஸ்ரீ உ.வே. ரங்கதுரை அய்யங்காரின்

ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில் வெளியிடப்பட்டது.

15. 5. 2007






Smt. & Sri. DESIKACHARIAR

ஸ்ரீ:

# முன்னுரை

இந்த உலகில் ஜீவராஸிகள் எல்லாவற்றையும்விட மனிதனே உயர்ந்தவன். 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று ஔவையார் கூறினார். ' जन्तूनां नर जन्म दुर्लभम् ' (பிறவிகளில் மனிதப் பிறவி கிடைப்பது கடினமானது) என்று ஆதிஶங்கரரும் கூறியுள்ளார். அப்படிப்பட்ட மனித ஜன்மம் எடுத்த ஒருவன் பல ஜன்மங்கள் கழிந்து ஸூர்ய பகவானை உபாஸிக்கிறவன் (வழிபடுபவன்) ஆகிறான். அவ்வாறு ஏழு ஜன்மங்களில் ஸூர்யனிடம் பக்தி செய்பவன். ஸூர்யனுடைய அனுக்ரஹத்தினால் ருத்ரபக்தனாகப் பிறக்கிறான். ருத்ரனிடம் ஏழு ஜன்மங்களாக பக்தி செலுத்துபவன் அவனுடைய அனுக்ரஹத்தினால் வைஷ்ணவனாகப் பிறக்கிறான். விஷ்ணுபக்தனாகி ஏழு ஜன்மங்களுக்குப் பிறகு அவனுடைய அனுக்ரஹத்தினால் விஷ்ணுவாகிய வாஸுதேவனையே அடைகிறான் (மோக்ஷம் பெறுகிறான்) என்று கூறப்படுகிறது. ஆகவே ஒருவன் வைஷ்ணவ குடும்பத்தில் பிறப்பது அரிதிலும் அரிதாகும்.

வைஷ்ணவ மதம் வேதங்களிலேயே காணப்படுகிறது. விஷ்ணுதான் பரமபுருஷன், முழுமுதற்கடவுள், அவர்தான் நாராயணன், வாஸுதேவன் என்றெல்லாம் கூறப்படுகிறார். முதல் நாராயணன் ஒருவரே இருந்தார். அப்பொழுது வேறு எந்த தெய்வமும் இல்லை. அவரிடமிருந்தே ப்ரஹ்மாவும் ஶிவனும் தோன்றினார்கள். எல்லா தெய்வங்களும் (வாயு, இந்த்ரன், வருணன், அக்னி, முதலானோர்) அவருடைய அங்கங்களே. இவர்கள் எல்லாம் விஷ்ணுவால் ஏவப்பட்டுத் தத்தம் கார்யங்களைச் செய்கின்றனர். இக்கருத்து வேதங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், புராணங்களிலும் காணப்படுகிறது. ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீ மஹாபாரதம் ஆகிய இரண்டு இதிஹாஸங்களின் மூலமாகவும் விஷ்ணுவின் ஒப்பற்ற

தனித்தன்மையை அறிகிறோம். பதினெட்டு புராணங்களில் முக்யமானதும், ஸ்ரீ ஶங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வர் மூவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டதுமான 'புராண ரத்னம்' என்ற சிறப்பையுடைய ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் விஷ்ணுதான் பரப்ரஹ்மம், அவரே படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய செயல்களைத் தானாகவும், பிற தெய்வங்களைக் கொண்டும் செய்கிறார் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் ஸ்ரீ என்றும், லக்ஷ்மீ என்றும் கூறப்படுகிற பெரிய பிராட்டியுடனே எப்போதும் சேர்ந்து இருப்பவர் என்றும் விளக்கப்பட்டுள்ளது. தமிழ் இலக்கிய நூல்களில் மிகப் பழமையான சங்க கால நூல்கள் தொல்காப்பியம், பரிபாடல் முதலியவற்றிலும் இதே கருத்துதான் கூறப்பட்டுள்ளது. ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்த பாசுரங்கள் எல்லாமே விஷ்ணுதான் பரதத்வம், லக்ஷ்மியை விட்டுப் பிரியாதவர், அவருக்கு மேம்பட்டவர் யாருமில்லை என்பதைப் பறைசாற்றுகின்றன.

காலப்போக்கினால் மறைந்து கிடந்த திவ்யப்ரபந்தங்களைக் கண்டுபிடித்து நமக்கு மறுபடியும் அளித்தவர் ஸ்ரீ நாதமுனிகள் (824 - 920 AD) என்கிற மஹான் ஆவர். அவர் ந்யாய தத்வம், யோக ரஹஸ்யம் என்கிற தமது நூல்களினால் இந்த வைஷ்ணவ மதத்திற்கு அடிக்கல் நாட்டினார். விஷ்ணு பகவான் எப்பொழுதுமே பெரிய பிராட்டியுடன் கூடியிருப்பதால் இந்த மதம் ஸ்ரீவைஷ்ணவம் என்ற பெயர் பெற்றது. இதனை அனுஸரித்த (ஒட்டிய) ஸித்தாந்தத்திற்கு விஶிஷ்டாத்வைதம் என்று பெயர். இந்த ஸித்தாந்தத்தின்படி ஸ்ரீயுடன் கூடிய நாராயணன் (விஷ்ணு) உலகங்களில் உள்ள ஜீவராஶிகளையும், பொருள்களையும் தனது ஶரீரமாகக் கொண்டுள்ளார். அவற்றுக்கெல்லாம் தான் ஆத்மாவாக (பரமாத்மா) இருக்கிறார் என்று கூறப்படுகிறது. இந்த ஸித்தாந்தத்திற்குப் பலத்த அஸ்திவாரம் கட்டியவர், ஸ்ரீ நாதமுனிகளுக்குப் பின் ஆசார்யரான ஸ்ரீ ஆளவந்தார் என்கிற யாமுனாசார்யர் என்பவராவர். அவர் ஸ்ரீ நாதமுனிகளின் பெயரரும் கூட. அவர் வாழ்ந்த காலம் 916 – 1036 AD, அருளிச்செய்த நூல்கள் எட்டாகும். இவருக்குப் பின் ஆசார்ய ஸ்தானம்

வகித்தவர் ஸ்ரீ ராமானுஜர் என்ற மஹான். இவருக்கு உடையவர், யதிராஜர், எம்பெருமானார் என்ற பெயர்களும் உண்டு. கி.பி. 1017-லிருந்து 1137 வரை 120 ஆண்டுகள் வாழ்ந்த ஸ்ரீ ராமானுஜர், இந்த ஸித்தாந்தத்திற்கு ஒரு பெரிய, அழகிய மாளிகையே கட்டிவிட்டார். உபநிஷத்துக்களின் உட்கருத்தைக் கொண்ட ப்ரஹ்மஸூத்ரத்திற்கு உரையும், ஸ்ரீ பகவத் கீதைக்கு ஒரு உரையும் இவர் இயற்றினார். இன்னும் ஏழு க்ரந்தங்களையும் அருளிச்செய்தார். திவ்யப்ரபந்தங்களுக்கு தம் ஶிஷ்யர்களுள் முதல்வரான ஸ்ரீ திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவரைவிட்டு ஒரு உரை அருளச்செய்தார். இந்த நூல்களே தற்போது நிலவி வரும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு ஆதாரங்களாகும். ஆக, இந்த ஸித்தாந்தத்திற்கு 'ஸ்ரீ ராமானுஜ தர்ஶனம்' என்ற பெயரும் உண்டு.

பகவத் ராமானுஜருக்கு ஒரு நூற்றாண்டிற்குப் பின் தோன்றிய ஸ்ரீ வேதாந்த தேஶிகன் நூற்றுக்குமேல் அருளிச்செய்த தமது நூல்களின் மூலம் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த மாளிகைக்கு ஒரு மாபெரும் அரணையே கட்டினார். அவர் ஒரு அவதார புருஷர். திருமலை ஸ்ரீ வேங்கடேஶ பெருமாளின் திருமணியின் அவதாரம் என்று போற்றப்படுகிறார். தமது பூர்வாசார்யர்கள் அருளிய க்ரந்தங்களுக்கு விளக்கவுரைகள் எழுதியும், புதிதாகவே பல நூல்கள் எழுதியும், ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை மக்களிடையே பரப்பினது மட்டுமல்லாமல், பிற மதத்தினர் இந்த ஸித்தாந்தத்தில் குறைகள் காணாவண்ணம் எல்லா கோட்பாடுகளையும் வேதங்கள், இதிஹாஸ-ஸ்ம்ருதி-புராண-திவ்யப்ரபந்தங்களைக் கொண்டும் உறுதியாக்கித் தந்தார். அவர் ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்கு ஆற்றிய பணிகள் சொல்லடங்கா. ஸம்ஸ்க்ருதம், தமிழ், மணிப்ரவாளம் (ஸம்ஸ்க்ருதம் கலந்த தமிழ்), ப்ராக்ருதம் ஆகிய நான்கு மொழிகளில் தமது க்ரந்தங்களை இயற்றினார். பண்டிதர், பாமரர், ஊக்கமுடையோர் ஆகியவர் எல்லோருக்கும் பயன்படும்படியாக விரிவாகவும், சுருக்கமாகவும் ஸ்வாமி தேஶிகனின் ஸ்ரீஸூக்திகள் (நூல்கள்) பலவிதத்தில் அமைந்துள்ளன. ஒவ்வொரு

நூலும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தில் காணப்படும் தத்வ-ஹித-புருஷார்த்தங்களை அவர் விளக்கியுள்ளார். ஆகவேதான் அவர் அருளிச்செய்த க்ரந்தங்கள் ஒவ்வொன்றும் மனிதனுக்கு முக்தியடையும் வரையில் எல்லா விதங்களிலும் உதவும் என அவர் மேல் இயற்றியுள்ள ஒரு தனியன் கூறுகிறது ("சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான் பாரொன்றச் சொன்ன பழமொழியுள் ஓரொன்று தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு").




# ஸ்ரீ தேஸிக ஸ்தோத்ரங்கள்

ஸ்வாமி தேஸிகன் அருளிச்செய்த நூல்களில், வடமொழியில் உள்ள ஸ்தோத்ரங்கள் ஒரு முக்யமான பகுதியாகும். அவர் ஒரு வேதாந்தி மட்டுமல்ல, சிறந்த கவியும் கூட. 'கவிதார்க்கிக ஸிம்ஹம்' என்று அவருக்கு விஶேஷமான பட்டம் உண்டு. அவரது ஸ்தோத்ரங்களிலும், மற்றைய காவ்யங்களிலும் (பாதுகாஸஹஸ்ரம், யாதவாப்யுதயம், ஹம்ஸஸந்தேஶம் முதலியன) கவித்தன்மையும், லக்ஷணங்களும் மிளிர்கின்றன. ஸ்ரீ தேஸிகன் அருளிய ஸ்தோத்ரங்கள் இருபத்தெட்டாகும். பல நூற்றாண்டுகளாக கோயில்களிலும், இல்லங்களிலும் இவை ஸேவிக்கப்பட்டு (படிக்கப்பட்டு) வருகின்றன. இவைகளில் ஶக்தி வாய்ந்த பீஜாக்ஷரங்களும் மந்த்ரங்களும் இடம் பெற்றுள்ளன. இந்த ஸ்தோத்ரங்களை எல்லாரும் ஸேவிக்கலாம். இவைகளை ஆசார்யரின் உபதேஶம் இல்லாமலும் படிக்கலாம். ஒவ்வொரு ஸ்தோத்ரத்தையும்

ஏதாவது பலனை உத்தேஶித்தும் பாராயணம் செய்யலாம். ஸ்வாமி தேஶிகன் காலத்திலேயே இந்த ஸ்தோத்ரங்களின் மூலம் அவருக்கும், அவரை அண்டியவர்களுக்கும் பூர்ணமான பலன்கள் கிடைத்துள்ளன என்பதற்கு ஸ்ரீஸ்துதி, அபீதிஸ்தவம், கருட தண்டகம், ஸுதர்ஶனாஷ்டகம் முதலிய ஸ்தோத்ரங்கள் சான்று. மேலும், ஸுலபமான முறையில் தத்வ-ஹித-புருஷார்த்தங்களைத் தெரிந்துகொள்ள இந்த ஸ்தோத்ரங்கள் பெரிதும் பயன்படுகின்றன. ஆகையால் இந்த இருபத்தெட்டு ஸ்தோத்ரங்களுக்கும் பல ஆசார்யர்கள் உரை எழுதியுள்ளனர். ஸமீப காலத்திலும் இவ்வுரைகள் வெளிவந்த வண்ணம் இருக்கின்றன. ஸ்ரீ உ.வே. 'ஸேவா' ஸ்ரீநிவாஸராகவாசார்யர் ஸ்வாமி நிறுவிய 'ஸ்ரீ வேதாந்த தேஶிக ஆராய்ச்சி மையம்' இதுவரை பன்னிரண்டு ஸ்தோத்ரங்களைப் பல மொழிகளில் (ஆங்கிலம், ஹிந்தி உள்பட) மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது. இத்தகைய செயல்களினால் ஸம்ப்ரதாயத்திற்கு ஸேவை, ஸ்வாமி தேஶிகனுக்கு அஞ்ஜலி, ஸ்ரீவைஷ்ணவம் பரவுதல் முதலிய கைங்கர்யங்களில் ஈடுபாடு மட்டுமின்றி மக்களின் வாழ்க்கையே பொதுவாக மேம்பாடு அடைகிறது என்றால் அது மிகையாகாது.

இந்நூலைப்பற்றி

தற்போது ப்ரசுரம் ஆகும் இந்தச் சிறிய புத்தகம் ஸ்வாமி தேஶிகனின் ஸ்தோத்ரங்களுக்கு ஒரு அட்டவணைத் தொகுப்பு (Index) ஆகும். இருபத்தெட்டு ஸ்தோத்ரங்களை ஏழு பிரிவுகளாக்கி, ஒவ்வொரு ஸ்தோத்ரத்தைப் பற்றியும் சில விளக்கங்கள் கூறி, ஒவ்வொன்றிலும் சில முக்கிய ஶ்லோகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. பீஜாக்ஷரங்கள் அடங்கிய ஶ்லோகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த ஸ்தோத்ரங்களை அல்லது குறிப்பிட்ட ஶ்லோகங்களையாவது எவ்வளவுக்கெவ்வளவு ஶ்ரத்தையுடனும், ஶுத்தத்துடனும் படிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு பலன் *சீக்கிரமாகவும்*, நிலையாகவும் கிடைக்கும் என்று சான்றோர் கூறுவர்.

இந்தத் தொகுப்பை நமக்களித்தவர்

ஸ்ரீ உபயவேதாந்த வித்வான், ஸாஹித்யரத்ன, ராஷ்ட்ரபாஷா ப்ரவீண, ஶிக்ஷணகலா ப்ரவீண, ஶிரோமணி திருவள்ளூர் ஈச்சம்பாடி

ஸ்ரீ ரங்கநாதாசார்ய ஸ்வாமி, M.A., அவர்கள்.

அன்னார் ஸ்ரீ தேஶிக அஷ்டோத்தர ஶதநாமாவளிக்கு உரை எழுதி ப்ரசுரித்துள்ளார்.

மேலும், 'ஸ்ரீ வேதாந்த தேஶிக ஸ்தோத்ர பாட கோஷ்டி' என்ற ஸ்தாபனத்தை நிறுவி, ஸ்ரீரங்கம் மாடவீதிகளிலும், மற்ற இடங்களிலும் ஸ்வாமி தேஶிகனின் ஸ்தோத்ரங்களை ஸேவித்துக்கொண்டு செல்ல ஏற்பாடு செய்தார். இந்த ஸ்வாமி 29.2.2004 அன்று நடத்திய ஶ்ரவணதின உபந்யாஸத்தைத் தொகுத்து இச்சிறு நூல் தயாரிக்கப்பட்டுள்ளது. ஸ்வாமி தேஶிகனின் ஸ்தோத்ரங்களை லகுவான முறையில் அறிமுகம் செய்துகொள்ள இந்நூல் மிகவும் உதவும் என்று அடியேனின் திடமான நம்பிக்கை. ஆகையால் ஸ்ரீ ரங்கநாதாசார்ய ஸ்வாமிக்கு நம் எல்லாருடைய ப்ரணாமங்களும் தந்யவாதங்களும் உரித்தாகும்.

ஸ்ரீ செம்பூர் சேட்லூர் அத்திப்பட்டு தேஶிகாசார்யரின் புதல்வரான

ஸ்ரீ D. ரங்கதுரை அய்யங்கார் அவர்களின்

ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில் இப்புத்தகம் வெளியிடப்படுவது விஶேஷமாகும். இவர் ஸமூஹப் பணியில் முதுகலைப் பட்டம் பெற்றவர். நாற்பது வருட காலங்களாக மனித வளம், தொழில் உறவு, ஸமூஹ மற்றும் தொழில் நலம் ஆகிய துறைகளில் மாபெரும் நிறுவனங்களில் உயர்ந்த பதவி வகித்திருக்கிறார். அடியேனுடைய ஸம்பந்தியும், ஆப்தரும் கூட. பரம ஸாத்வீகர். இவர் இன்னும் அநேக ஆண்டுகள் திடகாத்ரராய் எழுந்தருளி இருந்து, ஶதாபிஷேக மஹோத்ஸவமும் கண்டருளி, இன்னும் பலருக்கு நன்மைகள் செய்யவேண்டுமென ஸ்வாமி தேஶிகனையும், பகவத் ராமானுஜரையும், பெரிய பிராட்டியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணனையும் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன்.

M.K. ஸ்ரீநிவாஸ தாஸன்

ஸர்வஜித், வைகாசி, அஶ்வினி (15.5.2007)

## ஸ்ரீ வேதாந்த தேசிக ஸ்தோத்ரங்கள் - ஓர் எளிய அறிமுகம்

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।

वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।।

ஸ்தோத்ரம் என்பது என்ன? 'गुणिनिष्ठ गुणाभिधानम्' என்பது ஸ்தோத்ரம். பல குணநலன்கள் கொண்டவர் ஒருவருடைய குணங்களை விவரித்துக் கூறுதல் ஸ்தோத்ரம் எனப்படும். 'स्तव्यः' என்று ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் அழைக்கப்படும் எம்பெருமானே உண்மையில் நம்மால் ஸ்தோத்ரம் செய்யத்தகுந்தவன். எம்பெருமான், அவனது பிராட்டிமார்கள், திவ்யாயுதங்கள், அவனுடைய கைங்கர்யபரர்களான நித்யஸூரிகள், அவனுடைய அடியார்களாய், நமக்கு ஆசார்யர்களாய் இருப்பவர்கள் ஆகியவர்களுடைய புகழ் பாடுவது ஸ்தோத்ரமாகும். நாள்தோறும் திருவாராதனம் செய்யும்போது அலங்காராஸனத்திலும், புனர்மந்த்ராஸனத்திலும் நாம் எம்பெருமானை 'श्रुति सुखैः स्तोत्रैः' என்றவாறு துதிக்கவேண்டும் என்பர் பெரியோர்கள். வேதங்களும், இதிஹாஸ–புராணங்களும் எம்பெருமானையும், அவனைச் சேர்ந்தவர்களையும் பரக்க ஸ்தோத்ரம் செய்வதை நாம் காண்கிறோம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் முதன்முதல் ஸ்தோத்ரம் அருளிச்செய்தவர் ஸ்ரீ ஆளவந்தார். பிராட்டி விஷயமாக சதுஶ்லோகியையும், எம்பெருமான் விஷயமாக ஸ்தோத்ரரத்னத்தையும் அவர் அருளிச்செய்தார். ஸ்ரீ கூரத்தாழ்வான் அருளிய பஞ்சஸ்தவங்கள், ஸ்ரீ திருக்கச்சி நம்பி அருளிய தேவராஜாஷ்டகம், ஸ்ரீ பராஶர பட்டருடைய ஸ்ரீஸூக்திகள் எல்லாம் ஸ்தோத்ரம் என்ற வகுப்பிலே சேரும். இவ்வாறு பூர்வர்கள் காட்டிய வழியில் ஸ்ரீ வேதாந்த தேசிகனும் பல ஸ்தோத்ரங்களை அருளிச்செய்துள்ளார். இவை 28-ஆக கணக்கிடப்பட்டுள்ளன. இவைகளை மிகச்சுருக்கமாக அனுபவிப்போம்.

ஸ்வாமி தேஶிகன் ஸ்தோத்ரங்களைப் பல வகைகளாகப் பிரிக்கலாம் (1) எம்பெருமானைப் பற்றியவை (2) பிராட்டிமார்களைப் பற்றியவை, (3) திவ்யாயுதங்களைப் பற்றியவை (4) பகவத் தாஸ்யர்களாய், நித்யஸூரிகளாய் இருப்பார் விஷயமானவை (5) எம்பெருமானை வஶப்படுத்தும் – ஸாத்யோபாயமான – ப்ரபத்தியை விளக்குபவை (6) ஸ்வாமி தேஶிகனின் வைராக்யத்தைக் காட்டுவது, மற்றும் (7) ஆசார்ய விஷயமான ஸ்தோத்ரம்.

ஸ்வாமி தேஶிகன் எம்பெருமானைப் பற்றி அருளிச்செய்த ஸ்தோத்ரங்களை இருவகைப்படுத்தலாம் (i) விபவாவதார எம்பெருமானைப் பற்றியவை (ii) அர்ச்சாவதார எம்பெருமானைப் பற்றியவை.

விபவாவதாரம் பற்றிய ஸ்தோத்ரங்கள் ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்ரம், மஹாவீர வைபவம், கோபால விம்ஶதி மற்றும் ஸ்ரீ தஶாவதார ஸ்தோத்ரம் ஆகியவை ஆகும்.

1. **ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்ரம்:** மதுகைடபர்கள் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டு, அவற்றை பிரமனுக்கு உபதேஶிக்க எடுத்த அவதாரம் இது. இந்த ஸ்தோத்ரம் 33 ஶ்லோகங்கள் கொண்டது. வித்யை வளர இந்த ஸ்தோத்ரத்தை எல்லோரும் பாராயணம் செய்யலாம். ஸ்வாமி தேஶிகனுடைய பெருமைகளுக்கு எல்லாம் காரணம் ஸ்ரீ ஹயக்ரீவனே. இந்த ஸ்தோத்ரத்தின் முதல் ஶ்லோகமே பொருள் செறிந்ததாகவும், அழகாகவும், எளிதில் மனப்பாடம் செய்யத் தகுந்ததாகவும் அமைந்துள்ளது. குழந்தைகளும், பெரியோர்களும் படிப்பதற்கோ, எழுதுவதற்கோ, பேசுவதற்கோ முன்னம் இந்த ஶ்லோகத்தைக் கூறினால் நன்மை பயக்கும்.

ज्ञानानन्दमयं देवं निर्मलस्फटिकाकृतिम् ।
आधारं सर्व विद्यानां हयग्रीवम् उपास्महे ।।

(பொருள்: ஜ்ஞான, ஆனந்த ஸ்வரூபமாகவும், வெண்மையான ஸ்படிகம் போன்ற உருவத்தை உடையவராயும், எல்லா விதமான வித்யைகளுக்கும் ஆதாரமாகவும் உள்ள ஸ்ரீ ஹயக்ரீவனை வணங்குகிறேன்.)

'உலகத்தில் ஜ்ஞானத்திற்கு எடுத்துக்காட்டாய் இருப்பவர்கள் எல்லோரும் ஸ்ரீ ஹயக்ரீவனுடைய அனுக்ரஹத்தைப் பெற்றவர்களே' என்று ஏழாம் ஶ்லோகத்தில் ஸ்வாமி தேஶிகன் அருளிச்செய்கிறார்.

दाक्षिण्यरम्या गिरिशस्य मूर्तिः देवी सरोजासनधर्मपत्नी ।
व्यासादयोऽपि व्यपदेश्यवाचः स्फुरन्ति सर्वे तव शक्तिलेशैः ॥ 7 ॥

(பொருள்: ஶிவபெருமானுடைய தக்ஷிணாமூர்த்தி என்ற ரூபம், நாமகளாகிய ஸரஸ்வதி, வ்யாஸர் முதலானவர்கள் ஸ்ரீ ஹயக்ரீவனுடைய ஶக்திலேஶத்தாலே ப்ரகாஶிக்கிறார்கள்.)

இந்த ஸ்தோத்ரத்தின் இருபத்தெட்டாவது ஶ்லோகத்தில் ஸ்வாமி தேஶிகன் ஸ்ரீ ஹயக்ரீவனை தமது நாக்கின் நுனியில் வீற்றிருந்து தமது வாக்கு வன்மையைச் சிறப்பிக்கும்படி ப்ரார்த்திக்கிறார். இந்த ஶ்லோகத்தைப் பாராயணம் செய்தால் விவாதங்கள், ஸபைகள், மேடைப் பேச்சுகளில் வெற்றி பெறலாம்.

विशेषवित्पारिषदेषु नाथ! विदग्ध गोष्ठिसमराङ्गणेषु ।
जिगीषतो मे कवितार्किकेन्द्रान् जिह्वाग्र सिंहासनमभ्युपेयाः ॥ 28 ॥

(பொருள்: ஸ்வாமி! விஶேஷ அறிவு பெற்றவர்களாகவும், நிபுணர்களாகவும் உள்ளவர்களின் ஸமூஹங்களிலும், வாதப்போர்க்களங்களிலும், யுக்தி வாதம் செய்பவர்களின் நடுவிலும் வெற்றி பெற விரும்பும் எனது நாவின் நுனியாகிய ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து அருள்வீராக!)

இந்த ஸ்தோத்ரத்தின் 32-வது ஶ்லோகம் ஸ்ரீ ஹயக்ரீவனுடைய த்யான ஶ்லோகமாக அமைந்துள்ளது.

व्याख्या मुद्रां करसरसिजैः पुस्तकं शङ्खचक्रे
बिभ्रद्भिन्न स्फटिकरुचिरे पुण्डरीके निषण्णः ।
अम्लानश्रीरमृतविशदैः अंशुभिः प्लावयन् माम्
आविर्भूयात् अनघमहिमा मानसे वागधीशः ॥ 32 ॥

(பொருள்: தாமரை போன்ற நான்கு திருக்கைகளில் உபதேஶ முத்திரை, புத்தகம், திருவாழி, திருச்சங்குகளைத் தாங்கிக்கொண்டு, பிளக்கப்பட்ட ஸ்படிகம் போன்ற உருவம் கொண்டவரும், அழகிய வெண்தாமரையில் எழுந்தருளியிருந்து மிக்க ஒளி வீசுபவரும், தோஷங்கள் இல்லாத பெருமைகளைப் பெற்றிருப்பவரும், வாக்கின் தெய்வமுமாகிய ஸ்ரீ ஹயக்ரீவன் தனது அம்ருதம் போன்ற வெண்மையான ஒளிக்கிரணங்களில் என்னை மூழ்கடித்து என் மனதில் நிலையாக வீற்றிருப்பாராக!)

2. **மஹாவீர வைபவம்:** சக்ரவர்த்தித் திருமகன் ஒருவனே மஹாவீரன் என்று பெருமை பெற்றவன். அவன் பெருமையைப் பேசுகிறது இந்த ஸ்தோத்ரம். இராமபிரானின் அவதாரம் முதல் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும் வரையிலான ராமசரிதம் இதில் கூறப்பட்டுள்ளது. இந்த ஸ்தோத்ரத்தை ஒரு முறை சொன்னாலும், ஸ்ரீமத் ராமாயணத்தை முழுவதும் அநுஸந்தானம் செய்வதற்கு ஒப்பாகும். ஸம்ஸார பயம் போவதற்கும், கடன் நிவாரணத்திற்கும் இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்யலாம் என்று பெரியோர் பணிப்பர். மேலும், இந்த ஸ்தோத்ரத்தின் நாற்பத்தி ஏழாவது சூர்ணிகை ஸ்ரீ ஸுந்தரகாண்டத்தின் ஸாராம்ஶம் ஆகும். ஒரே சூர்ணிகையில் அந்த காண்டத்தின் ஸம்பவங்களைச் சுருக்கி அருளியுள்ளார் ஸ்வாமி தேஶிகன். இச்சூர்ணிகையை மட்டும் பாராயணம் செய்வோர் ஸுந்தரகாண்ட பாராயணத்தின் பலனை அடைவார்கள்.

अपार पारावार परिखा परिवृत परपुर परिसृत दव दहन
जवन-पवन-भव कपिवर परिष्वङ्ग भावित सर्वस्व दान!

(பொருள்: கரை காணமுடியாத கடலால் சூழப்பட்ட இலங்கையில் (ஸீதா பிராட்டியைக் கண்ட பின்) காட்டுத்தீயை மூட்டி அதிவேகத்துடன் திரும்பிய வாயுபுத்திரனான ஹனுமானை இறுக அணைத்துக்கொண்டு அவனுக்கு எல்லா செல்வத்தையும் அளித்தவனே!)

3. **கோபால விம்ஶதி**: இந்த ஸ்தோத்ரம் கண்ணனைப் பற்றிய 21 ஶ்லோகங்களைக் கொண்டது. இதில் கண்ணன் அவதரித்தது முதல் கோபி வஸ்த்ராபஹரணம் வரையிலான சரித்ரங்கள் இடம்பெற்றுள்ளன. 'अखिलान् अवलोकयामि कालान्' என்ற 13-வது ஶ்லோகத்தில் நிகழ்கால வினைச்சொல்லாலே ஸ்வாமி தேஶிகனுக்கு கண்ணன் ஸேவை எப்பொழுதும் கிடைத்து வந்தது என்று தெரிகிறது. 'अधराहित चारुवंश नाळा:' என்று தொடங்கும் 12-வது ஶ்லோகத்தாலே கண்ணனுடைய ஸேவையைத் தன் அந்திம காலத்தில் ஸ்வாமி ப்ரார்த்திக்கிறார். இந்த ஶ்லோகத்தை அனுஸந்தானம் பண்ணுபவர்கள் ஸ்ரீ வேணுகோபாலனுடைய ஸாக்ஷாத்காரத்தைப் பெறுவர் என்பதை 'दिव्यवेणुरसिकं समीक्ष्यते' (21வது ஶ்லோகம்) என்று ஸ்வாமி அருளிச்செய்கிறார். மேலும் ஸந்தான பாக்யம் பெற விரும்புவோர் இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்யலாம். இது கட்டாயம் பலன் அளிக்கும் என்பது அனுபவ ஸித்தம்.

4. **தஶாவதார ஸ்தோத்ரம்**: எம்பெருமான் பல அவதாரங்கள் எடுத்தபோதிலும் பத்து அவதாரங்களை முக்கியமாகக் கூறுவார்கள். ஸ்வாமி தேஶிகன் அநேக இடங்களில் தஶாவதார வைபவத்தைப் பற்றிக் கூறியுள்ளார். தஶாவதார ஸ்தோத்ரம், தயா ஶதகம் (ஶ்லோகங்கள் 81 முதல் 90 வரை), வரதராஜ பஞ்சாஶத்தில் சில அவதாரங்களின் தொகுப்பு, மும்மணிக்கோவை, நவமணிமாலை முதலியவற்றில் தஶாவதார சரித்ரம் இடம்பெறுகிறது. தஶாவதார ஸ்தோத்ரத்தில், திருவரங்கத்தைப் பற்றி முதல் ஶ்லோகத்தில் கூறியபோதிலும், இது எல்லா திவ்யதேஶங்களுக்கும் பொருந்தும்.

'इच्छा मीन' என்று ஆரம்பிக்கும் 12-வது ஶ்லோகத்தில் ஒவ்வொரு அவதாரத்திற்கு இட்டிருக்கும் அடைமொழிகள் ரஸிக்கத்தக்கவை. இந்த ஸ்தோத்ரத்தைச் சொல்ல நினைத்தாலே எல்லாப் பலன்களும் கிட்டும் என்பதை 'स्तोत्रं विवक्षेत यः' என்று பலஶ்ருதியில் (13-வது ஶ்லோகம்) ஸ்வாமி அருளிச்செய்கிறார். 13 ஶ்லோகங்களைக் கொண்ட இந்த ஸ்தோத்ரத்தை அனுஸந்தித்தால் மனோ—வாக்—காயம் ஆகிய முக்கரணங்களுக்கும் நல்ல பயன் கிட்டும் என்று அருளிச்செய்கிறார். மற்றும் நவக்ரஹ ஶாந்திக்கு இந்த ஸ்தோத்ரத்தில் குறிப்பிட்ட ஶ்லோகங்களைத் தினமும் பாராயணம் செய்தால் போதும். ஒவ்வொருவருடைய தற்கால தஶைக்கும், புக்திக்கும் ஏற்ற ஶ்லோகங்களைப் பாராயணம் செய்யவேண்டும். அவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| க்ரஹம் | ஶ்லோகத்தின் எண் |
|---|---|
| ஸூர்யன் | 8 (ஸ்ரீ ராமாவதாரம்) |
| சந்த்ரன் | 10 (ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம்) |
| செவ்வாய் | 5 (ஸ்ரீ ந்ருஸிம்ஹாவதாரம்) |
| ராஹு | 4 (ஸ்ரீ வராஹ அவதாரம்) |
| குரு | 6 (ஸ்ரீ வாமன-த்ரிவிக்ரம அவதாரம்) |
| ஶனி | 3 (ஸ்ரீ கூர்மாவதாரம்) |
| புதன் | 11 (ஸ்ரீ கல்கி அவதாரம்) |
| கேது | 2 (ஸ்ரீ மத்ஸ்யாவதாரம்) |
| ஶுக்ரன் | 7 (ஸ்ரீ பரஶுராமாவதாரம்) |

இனி அர்ச்சாவதாரம் பற்றி ஸ்தோத்ரங்களை அனுபவிப்போம்.

5. **தேவநாயக பஞ்சாஶத்**: இந்த ஸ்தோத்ரம் திருவஹீந்த்ரபுரத்தில் வீற்றிருக்கும் எம்பெருமான் விஷயமானது. 53 ஶ்லோகங்களைக் கொண்டது. 'நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே' என்று நவமணிமாலை (6) அருளிச்செய்தபடி தேவநாதனுடைய வடிவழகு ஸ்வாமி தேஶிகனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. எம்பெருமானுடைய திவ்ய அவயவங்களில் ஈடுபட்ட ஸ்வாமி, எம்பெருமானின் கிரீடத்திருந்து தொடங்கி, திருவடித்துகள் வரையில் 30 ஶ்லோகங்கள் மூலம் அவைகளை ஒவ்வொன்றாக அனுபவித்து மகிழ்கிறார். ஸ்ரீ தேஶிகன் தம்மை நாயகியாகப் பாவித்து, எம்பெருமானின் ரூபலாவண்யத்தை அனுபவிப்பதை இந்த ஸ்தோத்ரத்தில் காணலாம். திருவஹீந்த்ரபுர எம்பெருமானுக்கு 'அடியவர்க்கு மெய்யன்' என்ற திருநாமம் உண்டு. அதை ஸ்வாமி முதல் ஶ்லோகத்தில் 'प्रणत' (அடியவர்) என்று தொடங்கி, இறுதியில் 'सत्यवादी' (மெய்யன்) என்று அருளிச்செய்து, தேவநாதனை 'प्रणत सत्यवादी' (அடியவர்க்கு மெய்யன்) என்பதை நிரூபித்துள்ளார் போலும்! ஸ்ரீ தேஶிக பக்தர்கள் தாங்கள் எண்ணிய கார்யங்கள் நிறைவேற இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்யலாம்.

6. **அச்யுத ஶதகம்**: இதுவும் தேவனாதனைப் பற்றியது, 101 ஶ்லோகங்களைக் கொண்டது. தேவனாதனுடைய வடிவழகிலே ஈடுபட்ட ஸ்வாமி, தன்னை பெண்ணாக பாவித்து, இந்த ஸ்தோத்ரத்தை பெண்கள் பேசும் ப்ராக்ருத மொழியில் அருளிச்செய்தார் என்று கூறுவர். ப்ராக்ருத மொழி வடமொழியிருந்து தோன்றியதென்று பெரும்பாலோர் கூறுவர். ப்ராசீன நாடகங்களில் பெண் பாத்ரங்களும் குழந்தைகளும் ப்ராக்ருத மொழியில் பேசியிருப்பதை நாம் காண்கிறோம். இம்மொழிக்கு தனி இலக்கண நூல் உண்டு. ஸ்வாமி தேஶிகன் ஒருவரே இம்மொழியில் ஸ்தோத்ரம் அருளியுள்ளார். இது அவரது கவித்திறனைக் காண்பிக்கிறது. குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டு ஆனந்திப்பவர் இந்த ஸ்தோத்ரத்தை

உரக்கப்படித்து இன்புறுவர். அடியவர்க்கு மெய்யனான தேவநாயகனும் இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு மிக இன்புறுகிறான்; தனது அடியார்கள் விஷயத்தில் அச்யுதனாக (அசையாதவனாக) நிற்கிறான் என்பதை இந்த ஸ்தோத்ரம் விளக்குகிறது.

7. **தேஹளீஶ ஸ்துதி :** இது திருக்கோவலூர் ஆயனார் பற்றிய ஸ்தோத்ரம், 28 ஶ்லோகங்களைக் கொண்டது. இதில் திருக்கோவலூரிலே நெருக்குண்ட முதலாழ்வார்கள் மூவரையும், அதனால் விளைந்த ப்ரபந்தங்களையும் பற்றி ஸ்வாமி ரஸமாக அருளிச்செய்துள்ளார். இந்த திவ்யதேஶத்து எம்பெருமான் தன் திருக்கைகளில் திருவாழியையும், திருச்சங்கையும் மாற்றி தரித்துள்ளான். இதற்கு அற்புதமான விளக்கம் 'चक्रस्य' என்று தொடங்கும் 5-வது ஶ்லோகத்தில் ஸ்வாமி காட்டுகிறார். சக்ரம் இடத்தது (வாமம் – அஸுரர்களுக்கு க்ரூரமாக அமையவும்), ஶங்கு வலத்தது (தக்ஷிணம் – ஆஶ்ரிதர்களுக்கு அனுகூலமாக அமையவும்) என்று அருளிச்செய்தது ரஸமான விஷயம். மூன்று ஆழ்வார்களால் நெருக்கப்பட்டு, அவர்களையும் நெரித்துக்கொண்டு நின்ற எம்பெருமானின் ஸௌஶீல்யம் (உயர்ந்த நிலையில் இருப்பவன் தன்னைவிட தாழ்ந்த நிலையில் இருப்போரிடம் இரண்டறக்கலந்து பழகும் குணம்), மூன்று உருட்டுக் கட்டைகளிடம் அகப்பட்ட கரும்பின் சாறுபோல் இனிப்பாய் உள்ளது என்று 'कासारपूर्वक' என்று தொடங்கும் ஏழாவது ஶ்லோகத்தில் ஸ்வாமி தேஶிகன் அருளியுள்ளார். மற்றும் 'भक्तप्रिय' என்று தொடங்கும் பத்தாவது ஶ்லோகத்தில் எம்பெருமான் வாமனனாயிருந்து த்ரிவிக்ரமனாக வளர்ந்தபொழுது மேலே உயரத்தில் இருந்த நக்ஷத்ரக் கூட்டங்கள் முதல் அவனுடைய திருமுடிக்கு முத்துப் பந்தலாகி, பிறகு படிப்படியாக திருக்கழுத்தில் மாலையாகவும், திருவுதரத்தில் மேகலையாகவும் மாறிக் கடைசியில் அவனது திருவடிகளுக்குச் சிலம்புகளாயின என்று ஸ்வாமி வர்ணித்துள்ளார்.

8. **வரதராஜ பஞ்சாஶத்:** இது ஹஸ்திகிரியில் எழுந்தருளியிருக்கும் தேவப்பெருமாள் விஷயமான ஸ்தோத்ரம், 51 ஶ்லோகங்களைக் கொண்டது. தமது இஷ்டதேவதையான தேவப்பெருமாளை ஸ்வாமி இதில் பலவாறு ஸ்தோத்ரம் செய்கிறார். 'भक्तस्य दानव शिशोः' என்று தொடங்கும் இருபத்து மூன்றாம் ஶ்லோகத்தில், ஹிரண்யகஶிபு தன் காலால் எட்டி உதைத்த தூணைத் தவிர, இவ்வுலகில் மற்ற எல்லா இடங்களிலும் ஸ்ரீ ந்ருஸிம்ஹன் இன்றும் குடிகொண்டுள்ளான் என்று ஸ்வாரஸ்யமாக ஸ்ரீ தேஶிகன் அருளியுள்ளார். இம்மாதிரி இருப்பது தனது பரமபக்தனாகிய ப்ரஹ்லாதன், "இறைவன் எங்கும் உள்ளான்" என்று கூறியதைக் காப்பாற்றுவதற்காகவே என்கிறார் ஸ்வாமி. 'त्वं चेत् प्रसीदसि' என்று ஆரம்பிக்கும் 43-வது ஶ்லோகத்தில் வரதராஜப் பெருமாள் அருகே வஸித்து, அவனிடம் பக்தி பூண்டு, அவனை வழிபடும் பாகவதர்களுடைய அன்பைப் பெற்றால் ஸம்ஸாரமே மோக்ஷமாகும் என்று அருளிச்செய்கிறார். இங்கேயே முக்தர்களுடைய அனுபவம் ஏற்படுகிறபடியால் 'वैकुण्ठवासेऽपि न मेऽभिलाषः' (49-வது ஶ்லோகம்) என்று ஸ்ரீவைகுண்டத்திலும் தனக்கு விருப்பமில்லை என்று அருளிச்செய்கிறார். இந்த ஸ்தோத்ரத்தை பக்தியுடன் அனுஸந்திப்பவர்களுக்கு வேண்டிய பலன்கள் கரிகிரி மேல் நிற்கும் கற்பகத்தினிடமிருந்து எளிதில் கிட்டும் என்று அருளிச்செய்கிறார்.

9. **அஷ்டபுஜாஷ்டகம்:** பத்து ஶ்லோகங்களைக் கொண்ட இந்த ஸ்தோத்ரம், காஞ்சியில் எழுந்தருளியுள்ள அஷ்டபுஜகரப் பெருமாள் பற்றியது. பேயாழ்வார் அருளிய 'குட்டத்துக்கோள் முதலை துஞ்ச' என்றபடியே முதல் ஶ்லோகத்தில் 'गजेन्द्र रक्षा त्वरितं भवन्तम्' என்று அருளிச்செய்திருப்பதும், எம்பெருமான் அருளால்தான் அனைத்து முயற்சியும் கைகூடும் என்பதை 'भयं कुतः स्यात् त्वयि सानुकम्पे' (5-வது ஶ்லோகம்), 'त्वयि प्रवृत्ते मम किं प्रयासैः' (6-வது ஶ்லோகம்)

என்று அருளிச்செய்திருப்பதும் ரஸமான விஷயம். ஶரணமடைந்தவர்களை ரக்ஷிக்கவேண்டும் என்ற ஆர்வத்தினாலே எம்பெருமானுக்கு சதுர்புஜங்கள் இரட்டித்து அஷ்டபுஜமாயிற்று ('द्विगुणस्राहुना' என்று ஆரம்பிக்கும் 10-வது ஶ்லோகம்) என்று அருளியது அற்புதம்.

10. **வேகாஸேது ஸ்தோத்ரம்:** காஞ்சியில், திருவெஃகாவில் எழுந்தருளியுள்ள யதோக்தகாரி (சொன்னவண்ணம் செய்த பெருமாள்) விஷயமான ஸ்தோத்ரம் இது. 10 ஶ்லோகங்களைக் கொண்டது. எம்பெருமானை அடைய அவனே உபாயம் என்பதைக் காட்டியருளியவன் யதோக்தகாரி.

'एकं वेगवती मध्ये हस्तिशैले च दृश्यते ।
उपाय फल भावेन स्वयं व्यक्तं परं महः ।।'

என்று ஸ்வாமி முதல் ஶ்லோகத்தில் ஸாதித்தருள்கிறார். திருமழிசைப்பிரானைப் பின்தொடர்ந்து எம்பெருமான் சென்ற சரித்ரத்தை ஸ்வாமி நினைவு படுத்துகிறார். இந்த ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்கள் சொல்படி எம்பெருமான் நடப்பான் என்பதை

'ये पठन्ति जनास्तेषां यथोक्तं कुरुते हरिः'

(10-வது ஶ்லோகம்) என்ற வரியால் அருளிச்செய்கிறார் ஸ்வாமி.

11. **காமாஸிகாஷ்டகம்:** காஞ்சியில், திருவேளுக்கை என்ற திவ்யதேஶத்து எம்பெருமான் ந்ருஸிம்ஹன் விஷயமான ஸ்தோத்ரம் இது. இந்த திவ்யதேஶத்தை எம்பெருமான் விரும்பி இங்கு எழுந்தருளி இருப்பதால், இவன் 'காமாஸிகா' என்ற பெயர் பெற்றான். வேகவதீ நதியின் கரையில் விரும்பி எழுந்தருளியிருப்பவன் மூன்று திருக்கண்களை உடையவன். இம்மூன்று கண்கள் ஸூர்யன், சந்த்ரன், அக்னி ஆகும். உக்ரமான முதல் மற்றும் மூன்றாம் திருக்கண்களால்

தன்னை அடையாதாரையும், குளிர்ந்த இரண்டாம் திருக்கண்ணால் தன்னை அடைந்தோரையும் கடாக்ஷிக்கிறான் என்று பொருள் (4-வது ஶ்லோகம் காண்க). "இவன் ரக்ஷிக்க இருக்கும்போது மற்றவர் எதற்கு? இவன் ரக்ஷியாதபோது (ரக்ஷிக்கமுடியாத) மற்றவர் எதற்கு?" என்பதை 'त्वयि रक्षति रक्षकैः किमन्यैः त्वयि चारक्षति रक्षकैः किमन्यैः' என்று ஸ்வாமி தேஶிகன் 8-வது ஶ்லோகத்தில் அருளியுள்ளார். இந்த அற்புத ஸ்தோத்ரம் 9 ஶ்லோகங்களைக் கொண்டது. இழந்ததைத் திரும்பப்பெற இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்யலாம். ஸ்ரீ ந்ருஸிம்ஹன் ஒரே ஸமயத்தில் ஹிரண்யகஶிபுவின் மீது கோபத்தையும், ப்ரஹ்லாதன் மீது பரிவையும் காண்பித்ததற்கேற்ப இந்த ஸ்தோத்ரம் கடினமான உச்சரிப்பு கொண்ட வார்த்தைகளையும், ம்ருதுவான வார்த்தைகளையும் ஒருங்கே கொண்டதைக் காணலாம்.

12. **ஶரணாகதி தீபிகா :** 59 ஶ்லோகங்கள் கொண்ட இந்த ஸ்தோத்ரம், ஸ்வாமி அவதரித்த தூப்புல் அமைந்துள்ள திருத்தண்கா என்னும் திவ்யதேஶத்தில் எழுந்தருளியுள்ள தீபப்ரகாஶர் என்கிற விளக்கொளி பெருமாள் பற்றிய விஷயமாக விளங்குகிறது. ஶரணாகதி ஶாஸ்த்ரத்தை நன்கு நிலைநிறுத்தவே அவதாரம் செய்த ஸ்வாமி, ஶரணாகதி பற்றிய அனைத்து விஷயங்களையும் திரட்டிக் கூறுகிறார். இந்த ஸ்தோத்ரத்திற்கு 'दीपप्रकाश शरणागति दीपिका' என்ற பெயரை ஸ்வாமி கடைசி ஶ்லோகத்தில் அருளிச்செய்துள்ளார். ப்ரபந்நன் ப்ரபத்திக்கு முன்னும் பின்னும் இருக்கவேண்டிய நிலை, ப்ரபந்நன் மோக்ஷம் போகும் அர்ச்சிராதி மார்க்கம், செய்யவேண்டிய அபராதக்ஷாபணம் முதயவைகள் இந்த ஸ்தோத்ரத்தில் கூறப்பட்டுள்ளன. கீழே தரப்பட்டுள்ள 52-வது ஶ்லோகத்தில் ப்ரபந்நனான தன்னைக் காப்பாற்றாவிடில் பகவான் தனது பிருதுகளாகிய ஸ்வாமி, கருணைக்கடல், இனியன், பண்புள்ளவன், வள்ளல் முதலியவற்றை விடவேண்டி வரும் என்று கூறுகிறார்.

இந்த ஶ்லோகத்தை ப்ரபந்நர்கள் பாராயணம் செய்வார்கள்.

स्वामी ग़ुयाजलींग्निजिर्मजुरुः क्षमावाञ्
शीलींजिकीः श्रिक्ष वशः शुचिरुक्ष्युग़ुरुः ।
एक्षाग्नि ह्राक्षुमञ्चर्यों ञ्र किलींर्हृसि क्ष्वं
विख्याक्षिमञ्जि विरुज्युग्नि मया सहृव ॥ 52 ॥

13. **பரமார்த்த ஸ்துதி :** 10 ஶ்லோகங்களைக் கொண்ட இந்த ஸ்தோத்ரம் திருப்புட்குழி என்னும் திவ்யதேஶத்தில் எழுந்தருளியிருக்கும் விஜயராகவன் பற்றியது. ஸ்ரீமத் ராமாயணத்தைச் சுருக்கமாக இதில் காணலாம். உயர்ந்ததான தத்வார்த்தங்களை கூறுவதால், இந்த ஸ்தோத்ரம் 'பரமார்த்த ஸ்துதி' என்ற பெயர் பெற்றது. "அஸூயை இல்லாதவர்கள் இதனை ஏற்கவேண்டும்" (अनसूयुभिरादरेण भाव्या) என்று ஸ்வாமி 10-வது ஶ்லோகத்தில் அருளிச்செய்கிறார். 'புட்குழி' என்ற பெயருக்கு ஏற்ப, பிராட்டிக்காக ப்ராணத்யாகம் செய்து ஸ்ரீ ராமனால் இங்கு அந்திம ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ஜடாயுவைக் கொண்டாடுகிறார். ஶரணாகத ரக்ஷணம் எம்பெருமான் செய்யும் ஒரு யாகம் என்று இந்த ஸ்தோத்ரத்தில் அருளிச்செய்திருப்பது ரஸமான விஷயம்.

14. **பகவத் த்யான ஸோபானம் :** இந்த ஸ்தோத்ரம் திருவரங்கத்தில் நித்யவாஸம் செய்யும் அழகியமணவாளன் விஷயமானது, 12 அற்புதமான ஶ்லோகங்களைக் கொண்டது. ஸ்ரீ திருப்பாணாழ்வார் அருளிச்செய்த 'அமலனாதிபிரான்' என்ற ப்ரபந்தத்தையொட்டி திருவரங்கனுடைய திருவடி முதல் திருமுடி வரை ஒவ்வொரு அவயவத்தை அனுபவித்துப் பாடியருள்கிறார் ஸ்வாமி. எம்பெருமானைப் பற்றி த்யானம் செய்வதற்குப் படிபோல் அமைந்துள்ளது இந்த ஸ்தோத்ரம். ஒவ்வொரு அவயவத்தையும் தனித்தனியாக வர்ணித்துவிட்டு, 10-வது ஶ்லோகத்தில் அவைகளை

ஒன்றுசேர அனுபவிக்கிறார் ஸ்வாமி. 11-வது ம்லோகமான 'कान्तोदारैः' என்பதில் பெரிய பெருமாளுக்கு (மூலவருக்கு) முன்னே எழுந்தருளியிருக்கும் சதுர்புஜனான நம்பெருமாளை அனுபவிக்கிறார். இந்த ஸ்தோத்ரத்தை அனுஸந்திப்பவர்களுக்கு எம்பெருமானிடம் ஆழ்ந்த பக்தி உண்டாகும் என்பதை 'भक्तिं गाढां दिशतु भगवद्ध्यान सोपानम् एतत्' என்று 12-வது ம்லோகத்தில் அருளிச்செய்கிறார்.

15. **அபீதிஸ்தவம் :** முகலாயர் படையெடுப்பின்போது திருவரங்கத்து எம்பெருமானுக்கே கல் திரை இடும்படி ஆயிற்று. பல வைஷ்ணவ பெரியவர்கள் பரமபதம் அடைந்தனர். இந்த பயங்கர சூழ்நிலையில், ஸ்ரீ தேமிகன் ஸத்யகாலத்திற்கு எழுந்தருளினார். இவ்விதமான ஸமயத்தில் கஷ்டமெல்லாம் தீரும்படி ஸ்வாமி அழகியமணவாளனை அங்கிருந்தே ஸ்தோத்ரம் செய்தார். 'तुरुष्क यवनादिभिर्जगति जृम्भमाणं भयम्' என்ற பயம் தீரும்படிக்கான ஸ்தவம் ஆனதால் இது 'அபீதிஸ்தவம்' என்ற பெயர் பெற்றது. இந்த ஸ்தோத்ரம் 29 ம்லோகங்களைக் கொண்டது. 'भयं शमय', 'श्रियं प्रहुल्य प्रभो, श्रित विपक्षमुन्मूल्य' (20-வது ம்லோகம்) என்று வேண்டி, எம்பெருமானை எப்போதும் ஸேவித்துக் கொண்டு, திருவரங்கத்திலேயே நித்யஸூரிகளின் ஆனந்தத்தை அடைவோமாக என்று ப்ரார்த்திக்கிறார். இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்தால் எல்லா விதமான பயங்களும் விலகும் என்று பெரியோர் கூறுவர்.

இதுவரை எம்பெருமனைப் பற்றிய ஸ்தோத்ரங்களை அனுபவித்தோம்.

ந்யாஸ திலகம், திருவரங்கன் விஷயமானபோதிலும், மரணாகதி ஸ்தோத்ரங்களில் சேர்த்து அனுபவிக்கப்படும். தயாமதகம், திருவேங்கடவன் தயைப்பற்றியதாகையாலும், தயையை எம்பெருமானின் பிராட்டியாக சித்தரித்திருப்பதாலும், அதை பிராட்டிமார்கள் ஸ்தோத்ரவரிசையில் அனுபவிப்போம்.

இனி பிராட்டிமார்கள் விஷயமான ஸ்தோத்ரங்களைப் பார்ப்போம்.

16. ஸ்ரீஸ்துதி : இது பெரிய பிராட்டியார் மஹாலக்ஷ்மி விஷயமான ஸ்தோத்ரம். பெரிய பிராட்டியார் எம்பெருமானை ஒரு கணமும் பிரியாதவளாய், பட்டமஹிஷியாய் விளங்குபவள்; ப்ரபந்ந சேதனர்களுக்கு புருஷகாரபூதையாய் (சிபாரிசு செய்பவளாய்) இருப்பவள். பிராட்டியார் இம்மைச் செல்வங்களை அள்ளித் தருபவள். இந்த ஸ்தோத்ரம் 25 ஶ்லோகங்களைக் கொண்டது. ஒவ்வொரு ஶ்லோகமும் மணியானது. சில ஶ்லோகங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

मानातीत प्रथित विभवां मङ्गलं मङ्गलानां
वक्षः पीठीं मधुविजयिनो भूषयन्तीं स्वकान्त्या ।
प्रत्यक्षानुश्रविक महिम प्रार्थिनीनां प्रजानां
श्रेयो मूर्ति श्रियम् अशरणस्त्वां शरण्यां प्रपद्ये ।। 1 ।।

(பொருள் : எண்ணுவதற்கே அரிய வைபவங்களை உடையவளும், மங்களப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் மங்களத்தை அளிப்பவளும், மது என்னும் அஸுரனை மாய்த்த எம்பெருமானுடைய திருமார்பை தன்னுடைய ஒளியால் ப்ரகாஶிக்கச் செய்பவளும், இம்மை, மறுமைகளைச் சேர்ந்த செல்வங்களை எல்லாம் ஜனங்களுக்கு அளிப்பவளாகவும் உள்ள ஸ்ரீ என்கிற திருநாமம் உடைய உன்னை, வேறு கதியற்றவனாகிய நான் ஶரணடைகிறேன்.)

योगारम्भ त्वरित मनसो युष्मदैकान्त्य युक्तं
धर्मं प्राप्तुं प्रथममिह ये धारयन्ते धनायाम् ।
तेषां भूमेर्धनपति गृहादम्बरादम्बुधेर्वा
धारा निर्यान्त्यधिकमधिकं वाञ्छितानां वसूनाम् ।। 16 ।।

(பொருள் : பக்தி செய்ய வேண்டி, பரமைகாந்திகள் தர்மங்களை அனுஷ்டிப்பதற்காக விரும்பும் த்ரவ்யங்கள் பிராட்டியின் அருளால் பூமியிருந்து

புதையலாகவோ, குபேரனுடைய க்ருஹத்திலிருந்தோ, வானத்திலிருந்தோ, கடலிலிருந்தோ மேலும் மேலும் வெள்ளமாய் வந்திடும்.)

श्रेयस्कामाः कमलनिलये चित्रमाम्नाय वाचां
चूडापीडं तव पद युगं चेतसा धारयन्तः ।
छत्रच्छाया सुभग शिरसश्चामर स्मेर पार्श्वाः
श्लाघाशब्द श्रवण मुदिताः स्रग्विणः सञ्चरन्ति ।। 17 ।।

(பொருள்: தாமரை மலரில் வாஸம் செய்பவளே! தமக்கு நன்மையை விரும்பி, வேதங்களுக்கு விசித்திரமான ஶிரோபூஷணமாக விளங்கும் உன் திருவடிகளை தங்கள் இதயத்தில் தாங்கியுள்ளவர்கள் பிற்காலத்தில் வெண்கொற்றக் குடை நிழல் இருந்து, சாமரங்கள் இருபக்கங்களில் வீசப்பட்டும், மாலைகள் அணிந்தும், நாலாபக்கங்களிலும் ஜனங்களால் புகழப்பட்டு மகிழ்ச்சியுடன் உலா வருகிறார்கள்.)

कल्याणानाम् अविकलनिधिः काऽपि कारुण्य सीमा
नित्यामोदा निगम वचसां मौलि मन्दार माला ।
सम्पद्दिव्या मधु विजयिनः सन्निधत्तां सदा मे
सैषा देवी सकल भुवन प्रार्थना कामधेनुः ।।24 ।।

இந்த ஶ்லோகம் த்யான ஶ்லோகமாகும்.

(பொருள்: மங்களங்களுக்கு அழியாத உறைவிடமாய், கருணையின் எல்லை நிலமாய், வேதாந்தங்களுக்கு மந்தார மாலையாய், மது என்ற அஸுரனை வென்றவனுடைய (எம்பெருமானுடைய) உயர்ந்த செல்வமாய், ஜனங்கள் விரும்பியதையெல்லாம் அளிக்கும் காமதேனுவாயுள்ள பெரிய பிராட்டி என் உள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்திருக்க வேண்டும்.)

ஸ்ரீஸ்துதியை அனுஸந்திப்பவர்கள் ஸகல மங்களங்களையும் பெறுவார்கள் என்று பல ஶ்ருதியில் ஸ்வாமி அருளிச்செய்கிறார்.

17. ஸ்ரீ பூஸ்துதி : இது பூமிப்பிராட்டியின் விஷயமான 33 ஶ்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரம். பூமிதேவியை ஸ்ரீ வராஹப் பெருமாளுக்குப் பிராட்டியாக வைத்துப் பாடியது இந்த ஸ்துதி. பூஸூக்தத்தைத் தவிர பூமாதேவிக்கு வேறு ஸ்தோத்ரங்கள் இல்லை. ஸ்வாமி தேஶிகன் அக்குறையைத் தீர்த்து வைத்தார். பூமிப்பிராட்டி, 'सर्वसहा' (எல்லாவற்றையும் பொறுப்பவள்), 'अवनि' (காப்பாற்றுபவள்), 'अचला' (காப்பாற்றுவதில் உறுதியாக இருப்பவள்), 'विश्वम्भरा' (உலகைத் தாங்கி நிற்பவள்), 'विपुला' (அளவிட்டுச் சொல்லமுடியாத பெருமைகளை உடையவள்), 'वसुन्धरा' (உயர்ந்த செல்வம் உடையவள்) என்ற திருநாமங்களை உடையவள் என்று அற்புதமாக வர்ணிக்கிறார் ஸ்வாமி. பூமிப்பிராட்டியை ஸமுத்ரத்திலின்றும் வராஹப் பெருமாள் மீட்டு வந்த வரலாறு நன்கு விளக்கப்படுகிறது. 'पत्युः दक्षिण पाणि पङ्कज पुटे' என்று தொடங்கும் 32-வது ஶ்லோகம் பூமிப்பிராட்டியின் த்யான ஶ்லோகமாக விளங்குகிறது, மேலும் திருவிடவெந்தை என்னும் திவ்யதேஶத்தில் ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானை நம் கண் முன்னே நிறுத்துகிறது. இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்வோருக்குப் நிலம், வீடு முதயவைகள் எளிதில் கிட்டும். மற்றும் எல்லாச் செல்வங்களும் நிலையாக நிற்கும்.

18. ஸ்ரீ கோதாஸ்துதி : இது பெரியாழ்வார் என்ற விஷ்ணுசித்தரின் திருமகளாம் ஸ்ரீ ஆண்டாள் என்ற கோதாவைப் பற்றிய 29 ஶ்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரம். ஸ்ரீ விஷ்ணுசித்தர், ஸ்ரீ ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலையை எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்து 'பெரியாழ்வார்' என்ற பெருமையைப் பெற்றார் என்று அருளிச்செய்வது ரஸமான விஷயம். ஸ்ரீ கோதாவின் திருநாமத்தைப் பெற்றதால் கோதாவரி நதி பெருமைப் பெற்றாள் என்று ஸ்வாமி அருளிச்செய்கிறார். எம்பெருமானுக்கும் ஸ்ரீ ஆண்டாளுக்கும் நடந்த மாலை மாற்றுதல் முதலிய வைபவங்கள் இந்த ஸ்தோத்ரத்தில்

நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளன. ஸம்ஸாரிகளுக்காக கோதைப்பிராட்டியார் பரிந்து பேசுவதை 24-வது ஶ்லோகத்தில் ஸ்வாமி அற்புதமாக அருளிச்செய்கிறார்.

आर्द्रापराधिनि जनेऽप्यभिरक्षणार्थं
रङ्गेश्वरस्य रमया विनिवेद्यमाने ।
पार्श्वे परत्र भवती यदि तत्र नासीत्
प्रायेण देवि वदनं परिवर्तितं स्यात् ।। 24 ।।

(பொருள்: கோதாதேவியே! அநேக பாபங்கள் செய்துகொண்டே இருக்கும் ஜீவன்களைக் காப்பாற்றப் பெரிய பிராட்டி, ஸ்ரீ ரங்கநாதனுக்குப் பரிவுரை செய்யும்பொழுது அவன் சப்புடன் தனது முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொள்ளும்பொழுது, அப்பக்கத்தில் நீ வீற்றிருந்து பெரிய பிராட்டி கூறுவதை ஆமோதிப்பதனால் பகவானும் வேறு வழியில்லாமல் அவர்களைக் காப்பாற்றி விடுகிறானன்றோ.)

'शतमख मणि नीला' என்று தொடங்கும் 28-வது ஶ்லோகம் ஸ்ரீ கோதைப்பிராட்டியாரின் த்யான ஶ்லோகமாக அமைந்துள்ளது. இந்த ஸ்துதியைக் கற்பவர்கள் திருவரங்களின் கைங்கர்யத்தில் இடைவிடாது ஈடுபடும் பாக்யத்தைப் பெறுவார்கள் என்று ஸ்வாமி அருளிச்செய்கிறார்.

19. **தயாஶதகம்** : இந்த ஸ்தோத்ரம், திருவரங்களின் தயைப்பற்றிய 108 ஶ்லோகங்கள் கொண்டது. இந்த ஸ்தோத்ரத்திற்கு ஸ்வாமி தாமே 'दयाशतकम् एतत्' என்று பெயரிட்டருளியுள்ளார். தயையை எம்பெருமானின் தேவியாகவே இதில் ஸ்வாமி கொண்டாடுகிறார். தயை என்ற குணம் இல்லாவிட்டால் எம்பெருமானின் கல்யாணகுணங்கள் எல்லாம் தோஷமாகவே இருக்கும் என்பதை 'वृषगिरि गृहमेधि गुणा :......त्वया विनाभूता :' என்ற 15-வது ஶ்லோகத்தின் மூலம் கூறியருள்கிறார். தயை என்ற குணம்தான் எம்பெருமானை,

தாழ்ந்தவர்களோடும் கலந்து பரிமாறச் செய்கிறது — குஹன், ஸுக்ரீவன், ஶபரீ, குசேலர், கண்ணனுக்குச் சந்தனம் கொடுத்த கூனி, ஆய்ச்சியர்கள், மாலாகாரர் — இவர்களுக்கு எம்பெருமானுடன் ஸம்பந்தம் கிடைத்ததை இதில் ஸ்வாமி தேஶிகன் அற்புதமாக அருளிச்செய்கிறார். எம்பெருமான் தஶாவதாரம் செய்தருளியதும் தயா கார்யமே என்று 81 முதல் 90 வரையிலான ஶ்லோகங்களில் அருளிச்செய்கிறார். "திருவேங்கடநாதன்தான் அடியேனைக் கொண்டு இந்த ஸ்தோத்ரத்தை அருளிச்செய்தான்" என்பதை 'देवो दयाशतकम् एतत् अवादयन् माम्' என்று 104வது ஶ்லோகத்தில் குறிப்பிடுகிறார்.

திவ்யாயுதங்களைப் பற்றிய ஸ்தோத்ரங்களில் எம்பெருமானின் வலது திருக்கரத்தில் வீற்றிருக்கும் ஸுதர்ஶன ஆழ்வானைப் பற்றி ஸுதர்ஶனாஷ்டகம், ஷோடஶாயுத ஸ்தோத்ரம் என்ற இரண்டு ஸ்தோத்ரங்களை அருளிச்செய்துள்ளார் ஸ்வாமி.

20. **ஸுதர்ஶனாஷ்டகம்:** திருப்புட்குழியில் பெரும்பாலான ஜனங்கள் ஜ்வரத்தால் மிகத் துன்புறுவதைக் கண்ட ஸ்வாமி, அவர்கள் ஸௌக்யம் பெறுவதற்காகக் கருணையுடன் இந்த ஸ்தோத்ரத்தை அருளிச்செய்தார். இது 9 ஶ்லோகங்களைக் கொண்டது. இதில் திருவாழியாழ்வானின் பெருமைகள் பரக்கப் பேசப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்ரத்தின் முக்கியமான ஶ்லோகம் கீழ்வருமாறு.

महित सम्पत्सदक्षर विहित सम्पत्षडक्षर
षडर चक्र प्रतिष्ठित सकल तत्त्व प्रतिष्ठित ।
विविध सङ्कल्प कल्पक विबुध सङ्कल्प कल्पक
जय जय श्री सुदर्शन जय जय श्री सुदर्शन ॥ 7 ॥

(பொருள்: திருவாழி ஆழ்வானே! ஆறு அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரத்தை உடையவரே! ஆறுகோண சக்ரத்தில் வீற்றிருப்பவரே! எல்லா தத்வங்களுக்கும்

அந்தர்யாமியாய் இருப்பவரே! விரும்பிய செயல்களைச் செய்துமுடிப்பவரே! தேவர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவரே! மேலும் மேலும் வெற்றி கொள்வீராக!)

இந்த ஸ்தோத்ரத்தை அனுஸந்தித்து வந்தால் எல்லா முயற்சிகளிலும் வெற்றி கிட்டுவது நிச்சயம். மேடு பள்ளங்களில் வண்டி ஓடினாலும், உயர்ந்த சக்கரத்தினால் காக்கப்பட்டு குடை சாயாமல் இருப்பதுபோல, இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்வோரின் வாழ்க்கை சீராக அமையும் (9-வது ஶ்லோகம்).

21. **ஷோடஶாயுத ஸ்தோத்ரம்:** திருப்புட்குழியில் தோன்றிப் பரவிய தீவிர நோயை தீர்க்க இந்த ஸ்தோத்ரத்தை ஸ்வாமி தேஶிகன் அருளினார். ஜனங்களும் இதைப் பாராயணம் செய்து ஆரோக்யத்தை அடைந்தார்கள். இந்த ஸ்தோத்ரம் திருவாழியாழ்வானுடைய 16 ஆயுதங்களைப் பற்றியது. (1) சக்ரம் (2) மழு (3) ஈட்டி (4) தண்டம் (5) அங்குஶம் என்கிற மாவெட்டி (6) நூறு வாயுடைய (ஶதமுக) அக்னி (7) கத்தி (8) ஶக்தி (வேல்) (9) ஶங்கம் (10) வில் (11) பாஶம் (12) கலப்பை (13) வஜ்ராயுதம் (14) கதை (15) உலக்கை (16) ஶூலம் ஆகிய 16 ஆயுதங்களயும் ஸ்வாமி குறிப்பிடுகிறார். மேலும், உலகிலுள்ள எல்லா ஆயுதங்களும் திருவாழியாழ்வானிடமிருந்தே உண்டாயின என்றும் அருளிச்செய்கிறார். இந்த ஸ்தோத்ரத்தை அனுஸந்தித்தால் நோய்கள் நீங்கி இன்புறலாம்.

நித்யஸூரிகள் விஷயமாக கருடாழ்வானைப் போற்றி ஸ்வாமி கருடதண்டகம், கருடபஞ்சாஶத் என்னும் இரு ஸ்தோத்ரங்களை அருளிச்செய்துள்ளார்.

22. **கருட தண்டகம்:** நித்யஸூரியான ஸ்ரீ பக்ஷிராஜனைப் பற்றி தண்டகமாக அமைந்துள்ளது இந்த ஸ்தோத்ரம். இதில் ஸ்வாமி

கருட பகவானின் பெருமையைப் போற்றுகிறார். இதைப் பாராயணம் செய்தால் கொடிய விஷ ஜந்துக்களால் வரும் பயம் நீங்கும். ஒரு பாம்புப் பிடாரனை வென்றி கொள்ள இந்த தண்டகத்தை ஸ்வாமி அருளிச்செய்ததாகக் கூறுவர்.

23. கருட பஞ்சாஶத்: பக்ஷிராஜனைப் பற்றி 50 ஶ்லோகங்களைக் கொண்டது இந்த ஸ்தோத்ரம். தமக்கு ஆசார்யரான அப்புள்ளாரால் உபதேஶிக்கப்பட்ட கருட மந்த்ரத்தை ஜபம் செய்தபோது, கருடாழ்வார் நேரே எழுந்தருளி ஸ்வாமிக்கு ஹயக்ரீவ மந்த்ரத்தை உபதேஶித்தார். இவ்வாறு கருட பகவானிடம் அனுக்ரஹம் பெற்ற ஸ்வாமி கருடனின் பெருமைகளை இந்த ஸ்தோத்ரத்தில் பரக்கப்பேசுகிறார். கருடன் அமுதம் கொண்டு வந்து தன் தாயின் அடிமையைப் போக்கிய விஷயம் முதலியவை இந்த ஸ்தோத்ரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இதைப் பாராயணம் செய்பவர்கள் நோய்-நொடி நீங்கி, மனக் கவலைகள் விலகி, விரும்பிய பலனை விரைவில் அடைவார்கள். கருடனை போன்ற பெருமையையும் அடைவார்கள் என்று ஸ்வாமி அருளிச்செய்கிறார்.

ஸ்வாமி ப்ரபத்தி விஷயமாக மூன்று ஸ்தோத்ரங்களை அருளிச்செய்துள்ளார். அவை ந்யாஸ தஶகம், ந்யாஸ விம்ஶதி மற்றும் ந்யாஸ திலகம்.

24. ந்யாஸ தஶகம்: இது பத்து ஶ்லோகங்கள் கொண்டது, காஞ்சி பேரருளாளன் விஷயமாக அருளிச்செய்யப்பட்டது. ஶரணாகதி பற்றிய அனைத்து அங்கங்கள், ஸாத்விக த்யாகம் முதலியவை இந்த ஸ்தோத்ரத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்த ஸ்தோத்ரம் தினந்தோறும் திருவாராதனத்தின்போது அனுஸந்திக்கப்படுகிறது.

25. **ந்யாஸ விம்ஶதி :** ப்ரபத்தியை விளக்கும் 22 ஶ்லோகங்களைக் கொண்டது இந்த ஸ்தோத்ரம். ஆசார்ய லக்ஷணம், ஶிஷ்ய லக்ஷணம், ப்ரபத்தியின் பெருமை, அங்கங்களில் வரும் ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம் முதலியவை இதில் விவரித்துக் கூறப்பட்டுள்ளன. 'संसारावर्त वेग प्रशमन......' என்று ஆரம்பிக்கும் 22-வது ஶ்லோகத்தால் ப்ரபத்தி செய்துவிட்ட பின் தான் நிர்பரனாகவும் (பொறுப்பு முடிந்தவன்), நிர்பயனாகவும் (பயம் விலகியவன்) இருப்பதாக ஸ்வாமி அருளிச்செய்திருப்பது ரஸமான விஷயம். ந்யாஸ தஶகத்தை ஸேவித்துவிட்டு முடிவில் இந்த ஶ்லோகத்தையும் ஸேவிப்பது வழக்கம்.

26. **ந்யாஸ திலகம் :** 32 ஶ்லோகங்களைக் கொண்ட இந்த ஸ்தோத்ரமும் ப்ரபத்தியின் பெருமையை நன்கு விளக்குகிறது. மேலும் திருவரங்கனையும் போற்றிப் புகழ்கிறது. 'प्राय: प्रपदने पुंसां......' என்று தொடங்கும் 2-வது ஶ்லோகம் எம்பெருமனிடம் ஒரே முறை ஶரணாகதி செய்தால் போதும் என்றும், அவன் நிச்சயம் அபயம் அளிப்பான் என்றும் சொல்கிறது. பிராட்டியின் புருஷகாரம், ப்ரபத்தியில் திவ்யதம்பதிகள் இருவருமே சேர்ந்து உத்தேஶ்யமாதல் (இருவரிடத்திலும் சேர்த்து செய்யப்படுவது ப்ரபத்தி), ப்ரபத்தியின் பல்வேறு அங்கங்களின் விவரணம், ஶ்ரிய: பதியான எம்பெருமான் ஒருவனையே ஶரணமாக அடையவேண்டும் என்ற விஷயம் முதலியவை நன்கு விளக்கப்பட்டுள்ளன. இந்த ஸ்தோத்ரத்திற்கு ஸ்வாமி தானே 'ந்யாஸ திலகம்' என்ற திருநாமம் இட்டருளியுள்ளார். இந்த ஸ்தோத்ரத்தை அனுஸந்திப்பவர்களுக்கு எம்பெருமான் இம்மையிலும், மறுமையிலும் தனக்கு நித்ய கைங்கர்யம் செய்யும்படியான பாக்யத்தையும், அதனால் கிடைக்கும் பேரின்பத்தையும அருள்வான் என்று பலன் கூறப்பட்டுள்ளது.

27. வைராக்ய பஞ்சகம் : இது வைராக்யத்தை முன்னிட்ட ஸ்தோத்ரம். உலகில் எம்பெருமானைத் தவிர மற்ற விஷயங்களில் பற்றில்லாத தன்மையை விளக்கும் 6 ஶ்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரம். ஸ்வாமிக்குப் பொருள் உதவி செய்ய நினைத்து, அவருடைய நண்பரான வித்யாரண்யர் விஜயநகரம் எழுந்தருளும்படி ப்ரார்த்திக்க, ஸ்வாமி தனது வைராக்யத்தை விளக்கி எழுதி அனுப்பிய ஶ்லோகங்களே 'வைராக்ய பஞ்சகம்' என்ற ஸ்தோத்ரம். இந்த ஸ்தோத்ரத்தில் நரஸ்துதியின் இழிவையும், எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் மனுஷ்யரை யாசிக்காத தனது மனத் திண்மையையும், இம்மை செல்வத்தின் பயனற்ற தன்மையையும் விளக்கி, ஹஸ்திகிரியில் நித்யவாஸம் செய்யும் பேரருளாளனே தனக்குப் பெரும் செல்வம் என்றும் கூறி ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டுகிறார்.

28. யதிராஜ ஸப்ததி : இது எம்பெருமானார் என்று பெருமை பெற்ற பகவத் ராமானுஜரைப் போற்றி ஸ்வாமி அருளிச்செய்த ஸ்தோத்ரம்.

ஸ்ரீ ராமானுஜர் 74 ஸிம்ஹாஸனாதிபதிகளை நியமித்ததனாலும், திருவஹீந்த்ரபுரத்தில் ஸ்ரீ ஹயக்ரீவன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஔஷதகிரிக்கு 74 படிகள் இருப்பதாலும், இந்த ஸ்தோத்ரம் 74 ஶ்லோகங்களைக் கொண்டது எனப் பெரியோர் பணிப்பர். இந்த ஸ்தோத்ரத்தில் ஸ்வாமி, ஸ்ரீபாஷ்யகாரர் திருவடிகளில் தமக்குள்ள அத்யந்த பக்தியைப் பரக்க அருளிச்செய்துள்ளார். இதில் எம்பெருமான், பிராட்டி தொடங்கி, ஸ்ரீ பாஷ்யகாரரின் ஆசார்யரான ஸ்ரீ பெரிய நம்பிகள் வரை ஒவ்வொருவரையும் ஸ்தோத்ரம் செய்து, பின்னரே எம்பெருமானாரை ஸ்தோத்ரம் செய்யத் தொடங்குகிறார். ஸ்ரீபாஷ்யகாரர் எம்பெருமானின் பஞ்சாயுதங்களின் அவதாரம், விஷ்ணுமூர்த்தியான தத்தாத்ரேயரின் அவதாரம் என்று அருளிச்செய்கிறார். எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்திகளின் பெருமைகளை பலவிதமாகக் கூறுகிறார்.

இப்படிப்பட்ட ஆசார்யரின் உபதேஶத்தால் தம்முடைய ஜ்ஞானமானது நன்கு வளர்ந்தது என்று ஸ்வாமி அருளிச்செய்கிறார். இந்த ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்களுக்கு எம்பெருமானுடைய நித்யவிபூதியான ஸ்ரீவைகுண்டம், மற்றும் லீலாவிபூதியான ப்ரக்ருதி மண்டலம் ஆகியவைகளைப் பற்றிச் சிறந்த ஜ்ஞானம் வருவதோடு, நல்வழிகளெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எளிதில் விளங்கும். நமக்கு ஆசார்ய பக்தி பெருகவும், ஆசார்யர் நம்மிடம் அன்பு செலுத்தவும் இந்த ஸ்தோத்ரத்தை ஸேவிக்க வேண்டும். ஸ்வாமி தேஶிகனுக்கு பகவத் ராமானுஜரிடம் இருந்த பக்திக்கு ஈடு – இணையே கிடையாது. இவ்விருவருடைய அனுக்ரஹமும் இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்பவர்களுக்குக் கிடைக்கும்.

இப்படி ஸ்வாமி அருளிச்செய்த 28 ஶ்லோகங்களின் ஸாரார்த்தங்களைச் சுருக்கமாக அனுபவித்தோம். இந்த ஸ்தோத்ரங்களில் ஏதாவது ஒன்றையோ அல்லது சிலவற்றையோ தினந்தோறும் ஸேவித்து வந்தால் இஹ, பர ஸௌக்யங்களை எளிதில் பெறலாம்.

कवितार्किक सिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ।।



ஸ்ரீ மாலோலன்



ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்ய பாதுகாஸேவக
ஸ்ரீவண் ஶடகோப ஸ்ரீ நாராயண யதீந்த்ர மஹாதேசிகன்

அம்மன் மின் அச்சகம், ஓசூர். ✆ : 222626, 221014